[Sri T. S. Ramaswamy Pillai] [13th September 1958

கம்பெனி. அந்தக் கம்பெனிக்கு ஒரு லட்சம் ஸ்டெர்லிங் பவுண்டிற்கு விற்பனை செய்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. அயல் நாட்டுச் செலாவணிக் கஷ்டம் இருக்கும்பொழுது ஏன் ஒரு லட்சம் ஸ்டெர்லிங் பவுண்டிற்கு கொடுத்திருக்கிறார்கள் ? மாக்னெஸைட் ஸிண்டிகேட் கம்பெனியானது முதலிலே பர்ன் அண்டு கம்பெனிககு மாற்றவேண்டுமென்று சொன்ன பொழுது, சென்னை சர்க்கார் " கூடாது " என்று தீர ஆலோசனை செய்து முடிவு கட்டினார்கள். அதற்குப் பிறகு அந்தக் கம்பெனி இந்திய சர்க்காருக்கு அப்பீல் செய்தது. இந்திய அரசாங்கமும் கொடுக்கக்கூடாது என்று சொல்லிற்று. அதற்குப் பின்னர் என்ன நடந்தது என்று அறிய விரும்புகிறோம். எதற்காக இப்பொழுது இந்தக் கம்பெனிக்கு மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது ? அந்தக் கம்பெனி என்ன நிபந்தனைக்கு உட்பட்டது என்று கேட்க ஆசைப்படுகிறேன். இதைப் பற்றி பல வருடங்களாகப் பொது மக்களுடைய பிரதிநிதிகளும், தலைவர்களும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் இப்பொழுது பாராளுமன்ற அங்கத்தினராக இருக்கும் ஸ்ரீ டி. எஸ். பட்டாபிராமன், ஸ்ரீ காளியண்ணன், ஸ்ரீ எப். ஜி. நடேசன் போன்றவர்கள் எல்லாம் அங்கு தொழிலை அமைக்கவேண்டுமென்று மகசர் கொடுத்திருப்பதாக நான் அறிகிறேன். " டெக்னிகல் நோ ஹௌ " தெரிந்தவர்களை வரவழைப்பதற்கு சாத்தியக்கூறுகள் இருக்கின்றன. இந்தத் தொழிலை நடத்த இரண்டு கோடி ரூபாய் வேண்டுமென்று சொன்னார்கள். அதற்குப் பிறகு அது ஒரு கோடி ஆயிற்று. அரசாங்க செய்தித்துறை இலாகா வெளியீட்டில் ரூபாய் 70 லட்சம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த 70 லட்ச ரூபாயிலே ஒரு விமான நிலையம் கட்டுவதும் சேர்ந்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இந்த 70 லட்ச ரூபாய் செலவு செய்வதற்கு சென்னை அரசாங்கத்தால் முடியாமல் போய்விட்டதா ? ஐந்து கோடி ரூபாயை ஒரே நாளில் கடனாக வாங்கக்கூடிய சென்னை அரசாங்கத்திற்கு, strategical importance உள்ள ஒரு முக்கியமான தொழிலை எடுத்து நடத்துவதற்கு 70 லட்சம் ரூபாய் முதல் போட முடியவில்லையா ? ஏன் அந்தத் தொழிலை சர்க்கார் எடுத்து நடத்தக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

அது மட்டுமல்ல, இந்த பர்ன் அண்டு கம்பெனிக்கு உரிமை இன்னும் ஆறு மாதங்களுக்குத்தான் இருக்கும். அதற்குப் பின்னர் Mining Minerals Act Regulations பிரகாரம், 67-வது ஷரத்தின்படி, அவர்களுடைய term முடிந்துபோகும். அதற்குப் பிறகு அவர்கள் " ஸ்டாண்டர்டு ரெஜிஸ்தர் " என்ற ஒரு ரெஜிஸ்தரில் பதிவு செய்துகொள்ள வேண்டும். பதிவு செய்வதற்கு முன்னர் ஒரு மாத நோட்டீஸ் கொடுக்கவேண்டும். வேறு யாராவது தொழில் நிபுணர்கள் முன் வந்தால் அவர்களுக்குக் கொடுக்கலாம். இத்தகைய நிலைமை ஏற்படவில்லை. எதற்காக அவசரமாக நடவடிக்கை எடுக்கப்பட்டது என்று நான் கேட்கிறேன்.

## IX.—GOVERNMENT MOTION.

### MOTION UNDER RULE 235 OF THE ASSEMBLY RULES.

MR. SPEAKER : I think the hon. Member, Sri K. Vinayakam is right. He has pointed out to rule 39 of the Assembly Rules under which no debate can take place beyond half an hour unless a motion is made under Rule 235 by a member and carried by three-fourths of the members present and voting at the meeting. I have no objection to such a motion. Therefore, either I should take a vote now itself or at the end of the half-hour. Somebody will have to move a motion under Rule 235, to enable the Hon. Minister to reply. Any member or the Hon. Minister may move it.

13th September 1958]

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, under Rule 235 of the Assembly Rules, I move—

"That the proviso to Rule 39 be suspended with refrence to the time limit prescribed therein in its application to this discussion and that three-quarters of an hour be allotted for the discussion."

MR. SPEAKER : The question is—

"That the proviso to Rule 39 be suspended with refrence to the time limit prescribed therein in its application to this discussion and that three-quarters of an hour be allotted for the discussion."

The motion was put and carried by three-fourths of the members present and voting at the meeting.

### VIII.—HALF-HOUR DEBATE *RE* LEASE OF MAGNESITE DEPOSITS IN SALEM—*cont.*

MR. SPEAKER : Now, the hon. Member, Sri T. S. Ramaswamy Pillai should not monopolise all the available time. Already there are five members who have given their names to speak. So, Sri T. S. Ramaswamy Pillai will finish his speech as early as possible and out of the available time, I fix five minutes for each of the other members. In all fairness to the other Members, Sri Ramaswamy Pillai will kindly finish the speech soon.

SRI T. S. RAMASWAMY PILLAI : இன்னும் இரண்டு நிமிஷங்களுக்கு மேல் எடுத்துக் கொள்ளமாட்டேன் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே, இந்த அரசாங்கம் 6 மாத காலத்திற்குள்ளே அந்த "lease right"-ஐ மாற்றி ஏன் பர்ன் அண்டு கம்பெனிக்குக் கொடுத்தது என்று கேட்க விரும்புகிறேன். அரசாங்க செய்தித் துறை இலாகா வெளியீட்டில் தொழிலை ஆரம்பிப்பதற்காகக் கொடுத்தோம் என்று சொல்லப்படுகிறது. 1956-ம் வருடத்திலே இண்டஸ்டிரியல் லைசென்சு வாங்கும்பொழுது பர்ன் அண்டு கம்பெனி இங்கே தொழிலை ஆரம்பிப்பதற்கு மனுச் செய்திருந்தார்கள். நம்முடைய ராஜ்ய சர்க்கார் ஏற்று நடத்தும் பொறுப்பை விட்டுவிட்டு எதற்காக இதை மாற்றிக்கொடுக்க வேண்டுமென்பது தான் புரியவில்லை. இன்னொரு விஷயத்தையும் சொல்ல விரும்புகிறேன். முதலிலே நம்முடைய அரசாங்கம் மாற்றுவதற்கு அனுமதியளிக்க மறுத்தது. பின்னர் டில்லி அரசாங்கமும் மறுத்தது. அதன் பின்னர் மீண்டும் மனுச்செய்து கொண்டார்களா ? எந்த மனுவின் பேரில் மாற்றுவதற்கு சாங்ஷன் கொடுக்கப்பட்டது ? இன்னும் ஜனவரி 10-ம் தேதிக்குப் பின்னர் இந்த அதிகாரம் கொடுக்கப்பட்டதா, இல்லையா என்பதையும் அறிய விரும்புகிறேன். இப்பொழுதே வேறு பிரைவேட் நிலங்களும் இருக்கின்றன. ராவ் சாகிப் ரங்கநாதன் அவர்கள் வைத்திருக்கும் 150 எக்கர் நிலத்திலிருந்து கிட்டத்தட்ட $1\frac{1}{2}$ லட்சம் ரூபாய் கிடைக்கிறது. அதைவிட 10 மடங்கு அதிகமாயுள்ள 1,600 ஏக்கரா அரசாங்க நிலத்திலிருந்து 30,000 அல்லது 40,000 ரூபாய் தான் கிடைக்கிறது என்றால், குத்தகைக்குக் கொடுக்கும் விஷயத்திலே கூட அரசாங்கம் கண்ணும் கருத்துமாயில்லை என்று தான் அமைச்சர் பதிலிருந்து தெரிகிறது. இவற்றை எல்லாம் அமைச்சர் அவர்கள் விளக்கிச் சொல்லவேண்டும். மேலும் ஜனவரி 10-ம் தேதிக்கு மேல் கொடுத்திருந்தால் அது செல்லுபடியாகுமா ? ஸ்டாண்டர்டு ரெஜிஸ்தரில் பதிவு செய்யப்படவில்லை. 30 நாள் நோட்டீஸ் கொடுக்கப்படவில்லை. வேறு தொழில் நிபுணர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்படவில்லை. ஆகவே இந்த உரிமையை இந்த பர்ன் அண்டு கம்பெனிக்கு மாற்றி இருந்தாலும் கூட, அதை ரத்து செய்து விட்டு, அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.